உ
சிவமயம்

# திருப்பொன் ஊசல்



நகரச் சிவன் கோவில்

தேவகோட்டை



வெளியீடு

திரு. A. வேங்கடாசலம் செட்டியார்

உ

சிவமயம்

# திருப்பொன் ஊசல்

நகரச் சிவன் கோவில்

தேவகோட்டை

வெளியீடு

திரு. A. வேங்கடாசலம் செட்டியார்

# மீனாட்சி திருமணம்



அத்தலை நின்ற மாயோன் ஆதி,செங் கரத்து நங்கை
கைத்தலம் கமலப் போது பூத்ததோர் காந்தள் ஒப்ப
வைத்து,அரு மறுவாய் ஓத, கரகநீர் மாரி பெய்தான்;
தொத்தலர் கண்ணி விண்ணோர் தொழுதுபூ மாரி பெய்தார்.

உ

சிவமயம்

# திருப்பொன் ஊசல்

## நூல்முகம்.

திருப் பொன் ஊசல் மணிவாசகப் பெருமான் அருளியது. நவமணிகளைப் போல் ஒன்பது பாடல்கள் கொண்ட மணிமாலை பொன்னூசல். சிவன் கோவில்களில் இறுதி வழிபாடாகிய நள்ளிரவு வழிபாட்டுக்குப் பின் பள்ளி அறைகளில் தாலாட்டுவது போல, இப் பொன் ஊசல் பாடப் பெறுகிறது.

தேவகோட்டை நகரச் சிவன் கோவிலில் வெள்ளிக்கிழமை தோறும் இவ் வழிபாட்டில் திரளான மக்கள் கலந்து கொண்டு, பொன் ஊசல் கேட்டு மகிழ்ந்து இன்புறுகின்றனர். சிறப்பாகத் திருமணம் பெற வேண்டிய பெண்கள் இதில் மிகுதியும் ஈடுபட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் விருப்பம் நிறைவேறும் பொருட்டு, திருமணக் குறிப்பு உள்ள திருஞான சம்பந்தப் பெருமான் அருளிய திருவேதிகுடித்தேவாரப்பாடல் ஒன்றும் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றது.

சௌமிய ஆடி 31 ஆம் நாள் தொடங்கி, வெள்ளிக்கிழமை தோறும், வெள்ளிப் பல்லக்கில் சுந்தரேசப் பெருமானைப் பள்ளி அறைக்கு

எழுந்தருளச் செய்து, அம்பிகையோடு ஊசலில் அமர்த்தி, பொன்னூசல் பாடிப் போற்றப் பெறுகிறது. அதன் நான்காம் ஆண்டு நிறைவை ஒட்டி, பிரமாதீச ஆடி 26 ஆம் நாள் பள்ளி அறையில் ஓதும் பொருட்டு, இப்பொன் ஊசல் வெயிடப் பெறுகிறது.

இவ் வழிபாட்டை முன்னின்று சிறப்புற நடாத்தி வரும் தேவகோட்டை அன்பர் சோம. நாராயணன் அவர்கள் வேண்டுகோளின் மீது இதனைத் தொகுத்துக் கொடுத்திருக்கின்றேன்.

அன்பர் சோம. நாராயணன் அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப, இந்நூலை அச்சிட்டு உதவும், கோவை லோட்டஸ் நூற்பு ஆலையில் பணியாற்றி வரும் அன்பர் தேவகோட்டை A. வேங்கடாசலம் செட்டியார் அவர்களைப் பாராட்டுகின்றேன்.

தொடர்புடைய அனைவருக்கும், மீனாட்சி சுந்தரேசுவரர் எல்லா நலனும் அருள்வாராக.

பள்ளி அறைக் காட்சி காணவரும் ஆண் பெண் அனைவரும் இப்பாடல்களைப் பாடம் செய்து பயன் பெறுவார்களாக.

காரைக்குடி
26-7-73

இராய. சொ.

# திருப்பொன் ஊசல்

## ஆறடித் தரவு கொச்சகக் கலிப்பா

சீர்ஆர் பவளம்கால்
முத்தம் கயிறுஆக
ஏர்ஆரும் பொற்பலகை
ஏறி இனிதுஅமர்ந்து
நாரா யணன்அறியா
நாள்மலர்த்தாள் நாய்அடியேற்கு
ஊராகத் தந்துஅருளும்
உத்தர கோசமங்கை
ஆரா அமுதின்
அருள்தாள் இணைபாடிப்
போர்ஆர்வேல் கண்மடவீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- பவளம் கால். பவளத்தால் தூண் நாட்டி. முத்தம் கயிறு ஆக: முத்துவடங்களைக் கயிரு கக்கட்டி. ஏர்ஆரும் பொற்பலகை: மாற்றுஉயர்ந்த தங்கத்தால் செய்த ஊஞ்சல் பலகை. நாள் மலர்: அன்று பூத்த பூ. ஊர் ஆக: தங்கும் இடமாக. ஆரா அமுது: தெவிட்டாத அமுதனைய பிரான். போர் ஆர் வேல் கண்: போரில் செல்லும் வேல் அனைய விழி. மடவீர்: நங்கையர்களே. பொன் ஊசல் ஆடாமோ: பொன்னாலாய ஊஞ்சலில் இருந்து ஆடுவோமாக.

மூன்றுஅங்கு இலங்கு
நயனத்தன், மூவாத
வான்தங்கு தேவர்களும்
காணு மலர்அடிகள்,
தேன்தங்கித் தித்தித்து
அமுதுஊறித் தான்தெளிந்துஅங்கு
ஊன்தங்கி நின்றுஉருக்கும்
உத்தர கோசமங்கைக்
கோன்தங்கு இடைமருது
பாடிக் குலமஞ்ஞை
போன்றுஅங்கு அனநடையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- இலங்கு: விளங்குகின்ற. நயனம்: கண். மூவாத: மூப்புப்பெருத. ஊன் தங்கி: உடலில்பொருந்தி, இடைமருது: திருவிடைமருதூர், குலம்: சிறந்த. மஞ்ஞை: மயில். அங்கு: அசை.

முன்ஈறும் ஆதியும்
இல்லான், முனிவர்குழாம்
பல்நூறு கோடி
இமையோர்கள் தாம்நிற்பத்
தன்நீறு எனக்குஅருளித்
தன்கருணை வெள்ளத்து
மன்ஊற மன்னும்மணி
உத்தர கோசமங்கை
மீன்ஏறு மாட
வியன்மா ளிகைபாடிப்
பொன்ஏறு பூண்முலையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- முன்: நினைத்துப்பார்த்தால். ஈறும் ஆதியும்: முடிவும் முதலும். முனிவர் குழாம்: இருடிகள் கூட்டம். இமையோர்: தேவர். மன்: நிலையாக. மன்னும்: பொருந்தியிருக்கின்ற. மணி: அழகு. மின் ஏறு: மின் ஒளி பாயும். வியன்: பெரிய. பூண்: நகை.

நஞ்சுஅமர் கண்டத்தன்,
அண்டத் தவர்நாதன்,
மஞ்சுதோய் மாடமணி
உத்தர கோசமங்கை
அம்சொலாள் தன்னோடும்
கூடி, அடியவர்கள்
நெஞ்சுஉளே நின்றுஅமுதம்
ஊறிக் கருணைசெய்து,
துஞ்சல் பிறப்புஅறுப்பான்,
தூய புகழ்பாடிப்
புஞ்சம்ஆர் வெள்வளையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- நஞ்சு அமர்: விடம் தங்கும். கண்டம்: கழுத்து. அண்டத்தவர்: வானவர். மஞ்சுதோய்: மேகம் படிகின்ற. அம்சொலாள்: அழகிய பேச்சினளாகிய உமை. துஞ்சல்: இறப்பு. புஞ்சம்: கூட்டம்.

ஆணோ, அலியோ,
அரிவையோ, என்றுஇருவர்
காணாக் கடவுள்,
கருணையினால் தேவர்குழாம்
நாணாமே உய்யஆட்
கொண்டுஅருளி, நஞ்சுதனை
ஊண்ஆக உண்டுஅருளும்
உத்தர கோசமங்கைக்
கோண்ஆர் பிறைச்சென்னிக்
கூத்தன் குணம்பரவிப்
பூண்ஆர் வனமுலையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- அலி: ஆணும் பெண்ணும் அற்ற வடிவம். அரிவை: பெண். இருவர்: திருமாலும் பிரமனும். நாணாமே: அஞ்சாமல். உய்ய: உயிர் தப்ப. ஊண் ஆக: உணவாக. கோண் ஆர்பிறை: வளைந்த மதி. சென்னி: தலை. பூண்: நகை. வனம்: அழகு.

மாதுஆடு பாகத்தன்,
 உத்தர கோசமங்கைத்
தாதுஆடு கொன்றைச்
 சடையான், அடியாருள்
கோதாட்டி, நாயேனை
 ஆட்கொண்டு,என் தொல்பிறவித்
தீதுஓடா வண்ணம்
 திகழப் பிறப்புஅறுப்பான்,
காதுஆடு குண்டலங்கள்
 பாடிக் கசிந்துஅன்பால்
போதுஆடு பூண்முலையீர்!
 பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- மாது ஆடு: அம்பிகை கூடிய. தாது: மகரந்தத்தூள். கோதாட்டி: பாராட்டி, பிறவித்தீது: பிறவித் தீமை. ஓடாவண்ணம்: மேல் ஏறுதபடி. திகழ: விளங்க. போது ஆடு: மலர்மாலை அசைகின்ற.

உன்னற்கு அரியதிரு
உத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்துஇருந்த
மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்துஇறைஞ்சப்
பாவங்கள் பற்றுஅறுப்பான்
அன்னத்தின் மேல்ஏறி
ஆடும் அணிமயில்போல்
என்அத்தன் என்னையும்ஆட்
கொண்டான் எழில்பாடிப்
பொன்ஒத்த பூண்முலையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- உன்னற்கு அரிய: நினைப்பதற்கு அருமையான. மன்னி: நிலைபெற்று. பொலிந்து: விளங்கி. பன்னி: பலகாலும் சொல்லி பணிந்து இறைஞ்ச: தாழ்ந்து வணங்க. பற்று: தொடர்பு. அன்னத்தின் மேல் ஏறி: அன்னப்பறவை போன்ற ஊஞ்சலின்மீது ஏறி. என் அத்தன்: என் தகப்பன். பொன் ஒத்த பூண்: நகையணிந்த தங்கநிறமான.

கோல வரைக்குடுமி

வந்து, குவலயத்துச்

சால அமுதுண்டு,

தாழ்கடலின் மீதுஎழுந்து,

ஞாலம் மிகப்பரிமேல்

கொண்டு நமைஆண்டான்,

சீலம் திகழும்

திருஉத்தர கோசமங்கை

மாலுக்கு அரியானை

வாய்ஆர நாம்பாடிப்

பூலித்து அகம்குழைந்து

பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- கோல வரைக் குடுமி வந்து: அழகிய கைலைமலையின் உச்சியினின்றும் இறங்கி வந்து. குவலயம்: உலகம். சால: மிக. தாழ் கடலின்மீது எழுந்து: ஆழமான கடலின் அலைபோல மேலே கிளம்பி. ஞாலம் மிக: உலகம் மேம்பாடு அடைய. பரிமேல்கொண்டு: குதிரை மீது ஏறிக்கொண்டு. சீலம்: ஒழுக்கம். பூலித்து: உடல் பூரிப்படைந்து.

தெங்குஉலவு சோலைத்
திருஉத்தர கோசமங்கை
தங்குஉலவு சோதித்
தனிஉருவம் வந்துஅருளி,
எங்கள் பிறப்புஅறுத்திட்டு
எந்தரமும் ஆட்கொள்வான்,
பங்குஉலவு கோதையும்
தானும் பணிகொண்ட
கொங்குஉலவு கொன்றைச்
சடையான் குணம்பரவிப்
பொங்குஉலவு பூண்முலையீர்!
பொன்ஊசல் ஆடாமோ.

---

அரும் சொல் பொருள்:- தெங்கு: தென்னை. தங்கு உலவு: தங்கி விளங்குகின்ற. தனிஉருவம்: ஒப்பற்ற வடிவம். ஆட்கொள்வான்: அடிமை கொள்ளும் பொருட்டு.

உன்னி, இரு போதும், அடி
பேணும், அடி யார்தம்இடர்
ஒல்க அருளி,

துன்னி, ஒரு நால்வருடன்
ஆல்நிழல் இருந்த, துணை
வன்தன் இடமாம்;

கன்னியரொடு ஆடவர்கள்
மாமணம் விரும்பி, அரு
மங்க லம், மிக

மின்இயலும் நுண்இடைநன்
மங்கையர் இயற்றுபதி
வேதி குடியே.

—திருஞானசம்பந்தர்.

---

அரும் சொல் பொருள்:- உன்னி: நினைந்து. இடர் ஒல்க: துயர் கெட. துன்னி: நெருங்கி. ஒரு நால்வர்: ஒப்பற்றநான்கு முனிவர். துணைவன்: குருவடிவாக எல்லோர்க்கும் துணையான தென்முகக் கடவுள். அருமங்கலம்: அரிய திருமணம். வேதிகுடி: கண்டியூர் என்னும் தேவாரத்தலத்துக்குத் தென்கிழக்கே இரண்டு கல் தொலைவிலுள்ள தேவாரத் தலம்.

